egistered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 30—No. 9

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி புரட்டாசி 1957 செப்டேம்பர் | இதழ் 9

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.
உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜ அறிக்கை

ஞானியார் சுவாமிகள் என வழங்கிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் (5-வது பட்டம்) தம் வாழ்நாளில் பல இடங்களில் ஆற்றிய சொற்பொழிவுகளின் குறிப்புக்கள் ஒன்றிரண்டு வரப் பெற்று மாதாமாதம் சித்தாந்த இதழில் வெளிவருவதை அன்பர்கள் அறிவார்கள். இன்னும் வரவேண்டியவை பல உள்ளன. அவரது சொற்பொழிவுகளைக் குறிப்பெடுத்து எழுதி வைத்துள்ள அன்பர்கள் விரைவில் அவைகளைத் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், 150, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1 என்ற முகவரிக்கு அனுப்பி உதவ வேண்டப் படுகிறார்கள். வரும் குறிப்புக்களை விரிவுபடுத்தி 'சித்தாந்தத்'தில் வெளியிடவும், புத்தகமாக அச்சிட்டு 'ஞானியார் சுவாமிகள் நினைவு மலராக' வெளியிடவும் சமாஜம் முடிவு செய்துள்ளதை மீண்டும் அன்பர்கட்குத் தெரிவித்துக் கொள்ளப் படுகிறது.

## நற்செய்தி

உயர்திருவாளர் கே. சிங்காரவேலு செட்டியார் அவர்கள், கடத்தூர் (சேலம்) ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்தமையுடன், மூன்று நான்கு சந்தாதாரர்களையும் சேர்த்துக் கொடுத்துள்ளார்கள். இவ்வருட சமாஜ ஆண்டுக் கூட்டத்தைச் சேலம் ஜில்லாவில் நடத்தி வைக்கத்தக்க முயற்சியும் செய்து வருகிறார்கள். அவர்கள் கிராம முனிசிப்பாக இருந்து இவ்வளவு ஆர்வத்தோடு சமாஜ முன்னேற்றத்திற்கு முயற்சிப்பது மிகவும் போற்றத்தகுந்தது. அதுபோல் ஜில்லாவிற்கு ஒருவரிருப்பினும் நம் சமாஜம் பன்மடங்கு விருத்தியாகும்.

## ஐய வினாவிற்கு விடை

### 1

சிவயோக தியான புருஷர்களுக்கு உள்ளொளி விளங்குதல் அனுபவம். அதை ஆங்கிலத்தில் (Aura) என்று குறிப்பிடுவதுண்டு. அந்த உள்ளொளி (Aura) என்பதை மேனாடுகளில் ஆராய்ச்சி செய்து வெளியிடும் உண்மைக்கும், சிவபெருமான் காட்சி, கிறங்களோளரைந்துடைய காட்சியாகப் புலனாவதும் பொருத்த முடையதாகக் காணப்படுகிறது. கல்லும் பொன்னும் ஒக்க நோக்கவே விஷபாதிகளில்

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி புரட்டாசி 1957 செப்டம்பர் | இதழ் 9

## தலைவர் பேருரை

(மலர் - 30 ; இதழ் - 8 ; 236-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்த முறையில் பார்க்கும்போது தென்னாட்டில்தான் மடாலயங்களினுடைய சமயத் தொண்டும் இலக்கியத் தொண்டும் சிறந்து விளங்கி இருக்கின்றது. இந்தியப் பெரும் தத்துவ ஞானங்களாகிய அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் முதலிய தத்துவங்களை உலகிற்குக் கொடுத்தவர்கள் தென்னாட்டு மடாலயத்தார்களே. அப்படி இருந்தும் தற்காலத்தில் மடாலயங்கள் என்ற பெயர் சொன்னவுடனே மனதிற்குச் சிறிது வருந்தத்தக்க நிலை ஏற்படுகின்றது. ஏன் என்று கேட்கும் காலத்தில் அவைகளில் சீர் குறைந்த நிலை தோன்றியதால் தான் என்க. இந்த நிலை ஏற்பட்டபிறகு இந்து சமயிகளுக்கே பாதுகாப்பு இல்லாமல் போய்விட்டது. இந்திய நாடு இஸ்லாமியரால் அடிமைப் படுத்தப்பட்ட காலத்தில் அரசியலால் சமயங்களுக்குப் பாதுகாப்பு இல்லாமல் போய்விட்டது. அப்படிப் பாதுகாப்பு இல்லாத எழுநூற்றாண்டுகள் முழுதும் பற்பல மடாலயங்களே சமயங்களைப் பாதுகாத்தன. அப்படிப்பட்ட அரியபணி செய்துவந்த மடாலயங்கள் தற்போது அடைந்திருக்கும் நிலை பரிதவிக்கத்தக்கதே. இஸ்லாமியர்கள் அரசியலில் அடக்குமுறை கொண்டார்களேயன்றிச் சமயங்களைப் பொறுத்தமட்டில் யாதொரு தடையும் விதிக்கவில்லை. தற்போதைய நிலை அப்படியல்ல.

வெள்ளையர்கள் நாட்டையாண்ட காலத்தில் சமய வளர்ச்சிகளில் யாதொரு தடையும் செய்யவில்லை. ஆனால், நமக்குத் தன்னுரிமை கிடைத்தவுடன் பலவிதமான இடையூறுகள் சமயத்துறையில் ஏற்பட்டுவிட்டன. பிற சமயத்தார்கள் நமது சமயங்களை வெகுவாகத் தாக்கத் தொடங்கிவிட்டார்கள். சமயச் சார்பற்ற கொள்கை என்ற சாக்குக் கூறிக்கொண்டு மத்திய அரசியலார் வாளா இருக்கின்றனர். இதனையறிந்த பிற சமயத்தார்கள் புண்ணிற் கோல் போல் தீங்கு செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். சென்ற பத்து ஆண்டுகளாக அதற்குமுன் கண்டிராத அளவு நாட்டுச் சமயங்கள் வருத்தம் அடைந்து கொண்டிருக்கின்றன. முகம்மதியர் காலத்தில் பாதுகாப்பு அளித்துக் கொண்டு வந்த மடாலயங்கள் தற்போது பாதுகாப்பு அளிக்கும் ஆற்றல் இல்லாதவர்களாக இருக்கிறார்கள். மடாலயங்கள் முன்போலத் திருத்தொண்டு செய்தாலொழிய நமது சமயங்கள் முன்னேற்றம் அடைய வழி இல்லை.

மத மாற்றம் செய்வதில் அறிவுடன் செய்தால் தடை வேண்டியதில்லை. சிறு குழந்தைகளாக இருக்கும்போதே பிற மதத்தார்களின் ஆதரவில் விட்டுவிட்டால் மத மாற்றம் வெகு எளிதில் ஏற்பட்டு விடும். எண்ணிக்கையைச் சிறந்ததாகக் கொள்ளும் விவிலியம் முதலிய மதங்கள் நமது சமயத்தார்களை இழுத்துத் தம் வயப்படுத்திக் கொள்ளப் பல தூண்டுகோல்கள் இட்டு வருகிறார்கள். ஆங்கிலத்தை நன்றாகப் போதிக்கிறோம் என்று சொல்லி நாடெங்கும் கன்னிமாடக் கல்விச் சாலைகளை ஏற்படுத்தி நமது குழந்தைகளை இழுத்துக் கொள்கிறார்கள். அங்கே இளவயதிலேயே உள்ளங்களைச் சரிப்படுத்திவிடும் வகையில் சிறுமிகளைப் பக்குவப் படுத்தி விடுகிறார்கள். நமது இல்லங்களில் போதிய சமயப் பயிற்சி இல்லை. ஆகவே, இளைய உள்ளங்களில் விவிலிய அறிவே புகுந்து விடுகின்றது. பின்னல் இவ்வறிவு தோற்றுவிக்கும் பூசல்களுக்கும் அளவு இல்லை. அண்மையில் தோன்றிய ஒரு எடுத்துக்காட்டைக் கூறுகிறேன். பெற்றோர்கள் இருவரும் தூய்மையான சைவர்கள். அருமையிற் பெற்ற மகளை விவிலியப் பள்ளிக்கு அனுப்பினார்கள். அங்கே பயிற்சி பெற்ற அப்பெண்ணுக்கு

விவிலிய அறிவே கிடைத்தது. வயது வந்த பிறகு சைவ அறிவு கொடுக்கத் தொடங்கியும் அது பலன் அளிக்க வில்லை. அந்தப் பெண் ஆங்கிலப் படிப்பும் விஞ்ஞானப் படிப்பும் பெற்று ஒரு கல்லூரியில் ஆசிரியை ஆனாள். தன்னந்தானே வாழ்க்கை நடத்தும் நிலை வந்ததும் விவிலி யத்தில் புகுந்து விட்டாள். பெற்றோர்கள் படும் துயரத் திற்கு அளவில்லை. இது உண்மையில் நடந்தது. இதன் அடிப்படையை நம் நாட்டுச் சிறுவர்கள் அறிவதில்லை. ஆங்கில போதனை நன்றாகக் கிடைக்கின்றதென்று சொல்லித் தம் இளங் குழந்தைகளை விவிலியப் பள்ளிகளுக்கு அனுப்பு கிறார்கள். அங்கே அவர்களின் பெரும் தீங்கை சமயப் பற்றுக் குறைந்த நமது செல்வர்களும் செல்வியர்களும் அறிவதில்லை. இதனால் நாட்டிற்கே பெருங்கேடு உண்டா கிறதல்லவா ?

சில மாதங்களுக்குமுன் மத்திய பிரதேசத்தில் சமய மாற்றத்தைக் குறித்து ஒரு சோதனைக் குழு ஏற்படுத்தப் பட்டது. அதில் விவிலியர்கள் செய்யும் கணக்கற்ற தீங்கு களைப் பற்றி விசாரித்து அறிக்கை வெளியிடும்படி ஆணை யிடப்பட்டது. அவ்விசாரணை ஒரு உயர்தர மன்ற நீதிபதி யின்கீழ் நடைபெற்றது. வெளி நாட்டார்கள் சிறப்பாக அமெரிக்கர்கள் நமது நாட்டு மக்களைச் சிறப்பாக ஆதிவாசி களை விவிலியத்திற்குச் சேர்த்திக் கொள்ளச் செய்துவரும் முயற்சிகள் சான்றுகளோடு எடுத்துக் கூறப்பட்டன. அவர்கள் வெளியிட்ட அறிக்கையின்படி வெளி நாட்டி லிருந்து வந்த தொகைகளும், ஆட்களும் அளவிறந்தன. இங்கே சில் புள்ளிகளை மட்டும் எடுத்துக் கூறுவோம்.

1. வெளி நாட்டிலிருந்து இந்திய மிஷனரிகள் பெற்ற தொகை (1950—54) — ரூ. 29·27 கோடி

| | | |
|---|---|---|
| அமெரிக்கா | ... | 20·68 கோடி |
| கானடா | ... | 1·67 கோடி |
| பிறநாடுகள் | ... | 1·83 ,, |
| மொத்தம் | ... | 24·18 |

| | | | |
|---|---|---|---|
| இங்கிலாந்து | ... | 4·83 | கோடி |
| மற்ற இங்கிஷ் பிரதேசங்கள் | | ·25 | ,, |
| மொத்தம் | ... | 5·09 | |
| ஒட்டு மொத்தம் | ... | 29.27 | |

2. உலக முழுவதும் உள்ள கிரிஸ்தவர் தொகை :

| | | | |
|---|---|---|---|
| ரோமன் கத்தோலிக் | ... | 42·30 | கோடி |
| பிராட்டஸ்டென்ட் | ... | 20·9 | ,, |
| மொத்தம் | ... | 63·2 | |

3. இந்தியாவில் வேலை செய்யும் வெளி நாட்டு மிஷனரிகளின் தொகை :

| | | |
|---|---|---|
| 1940 | ... | 5417 (இந்தியா & பாகிஸ்தான்) |
| 1951 | ... | 4377 (இந்தியா மட்டும்) |
| 1955 | ... | 4877 ,, |

மத்திய பிரதேசத்தில் மட்டும் தற்போது 480 மிஷனரிகள் வேலை செய்கிறார்கள்.

4. மத மாற்றம் :

பள்ளிகள், ஆஸ்பத்திரிகள், அனாதை ஆசிரமங்கள் இவைகளின் மூலம் மதமாற்றம் நடைபெறுகின்றது. ஒரு குஷ்டரோக ஆஸ்பத்திரியில் மட்டும் 1947 முதல் 1954-க்குள் 154 பேர் கிறிஸ்துவத்தில் சேர்க்கப்பட்டனர். இவ்வாஸ்பத்திரிக்கு அரசியலார் வருஷம் ஒன்றுக்கு 26000 ரூபாய் உதவி தருகிறார்கள். பொறுப்பு யாருடையது? கூற வேண்டுமா?

மேலே கூறிய அறிக்கை வெளிவந்தவுடன் நம் நாட்டுக் கிறித்துவப் பாதிரிகள் செய்த கிளர்ச்சிகளுக்கு அளவில்லை. முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பது போல் பொய்ப் பிரசாரங்களைத் தூற்றிவிட்டு அந்த அறிக்கையை நசித்துவிட முயற்சித்தார்கள். ஆனால், உண்மை உண்மைதான். இதைக் கண்டும் நமது மக்க

ளுக்கு நல் உணர்ச்சி எழும்பவில்லை. இலட்சக்கணக்கான மலைவாசிகள் விவிலியத்தில் சேர்க்கப்பட்டார்கள். இராவணன் ஆண்டாலென்ன, இராமன் ஆண்டாலென்ன என்ற எண்ணத்தில் நமது மக்கள் வாளா கிடக்கின்றனர். பெரிய பாலாடைக் கட்டியில் ஒரு வளை செய்துகொண்டு உள்ளே வாழ்ந்து வந்த ஒரு பூனைக்குட்டியைப் போல் நமக்கு எப்படிக் கேடுவரும் என்று எண்ணிக்கொண்டு நமது சமயப் பொதுமக்கள் பேருறக்கம் கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட நிலைகளைப் பெருமை பொருந்திய இந்தச் சபையார்கள் ஆராய்ந்து தக்க வழிகளை ஏற்படுத்த வேண்டும்.

சீர்திருத்தம் :—ஏற்கனவே திருந்தி இருக்கும் நமது சமயத்திற்கு மீண்டும் சீர்திருத்தம் வேண்டுமா என்ற கேள்வி கேட்கப்படுகின்றது. சைவத்திற்கோ மற்ற இந்து சமயங்களுக்கோ யாதொரு சீர்திருத்தம் வேண்டியதில்லை. அவைகள் சிறந்த முறையில் வளர்ந்தவைகள். எந்த நன்செய் நிலத்திலும் புல், பூண்டு, களை முளைப்பது இயல்பு. அவைகளைப் பிடுங்கி எறியாவிடின் விளைவிற்குக் கேடு ஏற்படும். அது போலவே சமயத்திலும் உண்மைக் கோட்பாடுகள் ஒருபுறம் இருக்கக் களைகள் போலவும் புல்லுருவிகள் போலவும் பொருளற்ற சடங்குகள் ஏற்படுகின்றன. அவைகளில் கேடு கெட்டவைகளைக் களைந்தெறிவதே மக்களின் கடமையாகும். நமது சமுதாயங்களிலும் கோயில்களிலும் கணக்கற்ற சடங்குகள் சமயத்தின் பேரால் முளைத்திருக்கின்றன. ஒன்றிரண்டு எடுத்துக் காட்டுகள் இந்நிலையின் சீர்கேட்டை விளக்கிவிடும். அண்மையில் கன்னட நாட்டில் குருபர வகுப்பார்களில் ஒரு விழா நடைபெற்றது. பூசாரிகளின் தலைகளில் ஐம்பது தேங்காய்கள் உடைக்கப்பட்டனவாம். யாதொரு தீங்கும் நடவாததைக் குறித்து மக்கள் அருள் என்று வியப்படைந்தார்களாம். ஐம்பது ஆண்டுகளாக நடைபெறாமல் நின்றிருந்த இந்தக் கொடிய சடங்கு பிரதமர் முன்னிலையில் நடைபெற்றது என்று செய்தித்தாள் கூறியது. இச்சடங்கு தமிழ்நாட்டிற்குப் புதிதல்ல. திருச்சி வட்டத்தில் துறையூருக்கு அருகில் ஒரு குக்கிராமத்தில் பூசாரியைத் தெரிந்தெடுப்பதற்கு அவன் மண்டையில் தேங்காய் உடைப்பார்

களாம். இச்சடங்கைப் போலவே தீ மிதித்தல், அலகு போடுதல், செடில் குத்துதல் முதலிய கொடிய சடங்குகள் நமது நாட்டில் இன்னும் நடைபெறுகின்றன. அறிஞர்கள் இதனை அருள் என்ற ஒரு வார்த்தையில் தள்ளிவிடுகின்றனர். இவைகளால் பலன் என்ன ? மக்களுக்கு நன்மை உண்டா என்பதை எவரும் ஆராய்வது இல்லை. இக்கொடிய வழக்கங்கள் தென்னிந்தியாவை விட்டு ஈழநாடு, மலேயா, சிங்கப்பூர், பீஜித் தீவுகள், மோரிஸ் முதலிய பிற நாடுகளுக்கும் சென்றிருக்கின்றன. இதனைப் படம் பிடித்துச் செய்தித் தாள்களில் வெளியிட்டு நம்து சமயங்களைக் கேலி செய்கின்றார்கள். அண்மையிலே ஒரு விபரீத வளர்ச்சி ஏற்பட்டு வருகின்றது. கிராம தேவதைகளின் கோயில்களில் திருவிழாக்கள் நடைபெறும்போது உயிர்ப் பலி நடைபெற்று வந்தது. அதனை அரசியலார் நிறுத்திவிட்டார்கள். ஆனால், தற்போதோ அவைகளுக்கு மாறாக வேறு விபரீதங்கள் தோன்றி வருகின்றன. கரகமெடுத்தல், காவடி எடுத்தல், தீ மிதித்தல், பொய்க்கால் குதிரையாடுதல், புலி வேடம் போடுதல் முதலிய பொருளற்ற ஆபாசமான செயல்களைப் புரிந்து வருகிறார்கள். நாகரீகம் பெற்ற மக்களிடையேயும் இந்தப் புதிய கலைகள் முளைத்து வருகின்றன. இதனைச் சமயப் பெரியார்கள் கண்டிப்பதில்லை. வேறு வேலையில்லாத சில தான்தோன்றி மக்கள் வசூல் புத்தகங்களை எடுத்துக்கொண்டு வீடுதோறும் காணிக்கைகளை வசூல் செய்து பேருக்காக ஒன்றிரண்டு சொற்பொழிவுகளையும், பஜனைகளையும் நடத்திவிட்டு மீதிப் பணத்தைத் தமக்கு என வைத்துக் கொள்ளுகிறார்கள். நாளுக்கு நாள் இந்த இயக்கம் முற்பட்டு வருகின்றது. நகரங்களில் ஒருபுறம் சமயக் கூட்டங்கள் பெருகுவது குறித்து மகிழ்ச்சி யடைகிறோம். ஆனால், அதே சமயத்தில் அருவருக்கத்தக்க திருவிழாக்கள் ஓங்கி வருவதையும் காண்கின்றோம். இதனைச் "சமரசம்" என்ற ஒரு சொல்லில் சமாதானம் கூறிப் பொது மக்கள் ஆட்பேசணை கூறாமல் பொறுத்து வருகிறார்கள். இது நமது பண்பாட்டிற்கு உகந்ததா ?

**நமது கடமை என்ன ?**— இதுவரையில் சமயத்தின் பேரால் நடந்து வரும் குறைபாடுகளைப் பற்றிக் கூறினோம்.

இவைகளை நீக்கி நமது சமுதாயத்தை எந்த வகையில் நலம் செய்ய முடியுமென்று சில கருத்துக்களைக் கூறுகிறேன். பொதுவாகச் சைவ சமயக் கருத்துக்கள் நமது மக்களுக்குப் புறம்பாகவே நிற்கின்றன. ஏனெனில் அவைகளைப்பற்றிப் படித்தவர்களும் கூடச் சிந்திப்பதே இல்லை. தற்காலத்து மாணவனுக்கு விவிலிய முதலிய பிற சமயக் கொள்கைகள் நன்கு தெரியுமேயன்றிச் சைவ சித்தாந்தத்தின் அரியகோட்பாடுகள் தெரிவது இல்லை. அவைகள் கடுமையான செந்தமிழில் எழுதப்பட்டுள்ளன. பொதுமக்களுக்குப் பொருள் விளங்கக் கூடிய முறையில் எழுதப்படவில்லை. விவிலியத்திற்குச் சென்ற ஒரு பெண்மணி அடியிற்கண்டபடி கூறியதாகக் கேள்விப்பட்டேன்: "விவிலிய நூல் எத்தனை தெளிவாக இருக்கின்றது. பாமரனும் அறியக் கூடுமல்லவா? அதனைத் தெளிவிக்கவும் இலவச ஆசிரியர்கள் இருக்கிறார்கள். சைவத்தைப்பற்றிக் கற்பிக்கும் நூல்கள் எவ்வாறு இருக்கின்றன? சிவஞான போதம், அதன் சிற்றுரை, திருமுருகாற்றுப் படை முதலிய துதி நூல்கள் எவராலே எளிதில் அறிய முடியும்? அவைகளைக் கற்றுக் கொடுக்க இலவச ஆசிரியர்கள் இருக்கிறார்களா? ஆகையால்தான் சைவம் ஒரு குறுகிய நிலப்பகுதியில் அடைபட்டுக் கிடக்கின்றது. விவிலியமோ உலகமெங்கும் பரவிக் கொண்டு வருகின்றது" என்று ஆட்சேபித்த தன் தாய்க்கு அப்பெண்மணி கூறினளாம். இந்த விடையிற் காணும் உண்மையை நமது மக்கள் அறிய வேண்டும். சிறப்பாகத் தூத்துக்குடி, சித்தாந்த சபை போன்ற பெருமை பொருந்திய சபைகள் அறிய வேண்டும். அவைகளுக்குத் தகுந்த மருந்துகளையும் தேட வேண்டும்.

பண்டைக் காலத்தில் செந்தமிழில் நூல்கள் எழுதினார்கள். அதிற்கண்ட கருத்துக்களை அக்காலத்தார் அறிந்து கொண்டார்கள். இக்காலத்திலோ செந்தமிழ் கொடுந்தமிழாகிவிட்டது. பொருள் விளங்கும் தெளிவான தமிழில் நமது சமய நூல்கள் ஏற்படவேண்டும். அந்த முயற்சியிலே நமது பெரியார்கள் இறங்க வேண்டும். அப்போதுதான் நமது சமயம் மக்களிடை ஓங்கி வளர முடியும். நமது சடங்குகளையும் பகுத்தறிவுள்ள மக்களுக்கு ஏற்றனவாகச் செய்ய வேண்டும். சிறு குழந்தையும் தெளிவாக

அறிந்து கொள்ளும் முறையில் சமயக் கோட்பாடுகளை மக்களுக்கு அறிவுறுத்த வேண்டும். மனிதன் மனிதனாக வாழும் முறையில் சமயங்களும் உதவி புரிய வேண்டும். இந்த முயற்சியில் நாம் வாழ்வு பெறுவோமாக !

சமயப்பணி என்ற சொல்லைக் கேட்ட அளவிலே வாழ்க்கையின் உயர்வும் பிறர்க்கு என வாழும் தன்மையும் ஒலிப்பது மேல் நாடுகளில் சிறப்பாக அட்லாண்டிக் நாடுகளில் காணும் ஒரு சிறப்பு. ஆனால் கீழ் நாடுகளில் அதற்கு மாறான பொருள் ஒலித்து வருவதையே காண்கின்றோம். இதற்குக் காரணம் சமயம் என்பது தனி மனிதனுக்குத் தன்னலமாக ஏற்படும் ஓர் இயக்கம் என்ற அளவில் இங்கே மாறிவிட்டது. பிறருக்கு உதவி புரிந்து அதனால் தான் மேன்மையடைதல் என்ற எண்ணம் இந் நாட்டில் மறைந்தே போய்விட்டது. அதனாற்றான் சமயச் சொற்பொழிவுகளுக்குப் பொதுமக்கள் மிகுதியாக ஆதரவு தருவது இல்லை. அரசியல் கூட்டங்களுக்கும், சேவா நிலையக் கூட்டங்களுக்கும் பாமர மக்களும், கற்றவர்களும் செல்வதைப்போல சமயக் கூட்டங்களுக்குச் செல்வது இல்லை. சமயக் கூட்டங்களுக்குச் செல்வோரும் இசை இன்பத்திற்காகச் செல்லுகிறார்களே ஒழியக் கருத்து மேன்மைக்குச் செல்லுவதில்லை. ஆகவே, சமயம் முன்னேற வேண்டுமாயின் அதனுடைய போக்கையும் பயனையும் நல் வழிப்படுத்த முயலவேண்டும். சமய நிலையங்கள் இதில் ஈடுபட வேண்டும். சமயத்தோடு ஒழுக்கம் சிறந்து விளங்க வேண்டும். இக்காரணத்தினால் தான் விவிலிய, இஸ்லாமிய இயக்கங்கள் முன்னேறிக்கொண்டு வர, நமது சைவ இயக்கம், பயனற்றுக் குறைந்து வருகின்றது. ஆகவே ஒழுக்கம், சமுதாய சேவை இவைகளை முன்னர் நிறுத்தி அவைகள் மூலமாகச் சமய அறிவை ஊட்டிப் பெருக்க வேண்டும். கல்விச் சாலைகள், மருத்துவ விடுதிகள், அனாதை விடுதிகள், சிறைச்சாலைச் சேவை முதலிய பணிகள் நாட்டிற்கு மிகவும் இன்றியமையாத பணிகளாகும். இந்த வகையில் பணி செய்தாலன்றிச் சமயம் என்ற சொல்லில் தற்போது ஏற்பட்டிருக்கும் இழிவு எண்ணம் மாறாது. அந்த வகையில் சங்கங்கள் பணி செய்ய வேண்டும். அதுதான் சரியான இறை பணியாகும்.

மேலும் பழைமை என்ற சொல்லில் ஒரு தனிச் சிறப்பு உண்டு என்பது நமது மக்களின் கொள்கை. புதுமை என்றால் அதில் சிறிது தாழ்வு உண்டு என்று நினைப் போம். ஆனால், இறைவன் பழைமைக்குப் பழையன்; புதுமைக்கும் புதியன் என்பது மணிவாசகம். பழைய நூலில் கூறி இருக்கிறதென்று அதையே பின்பற்றுவது மதியீனம். புதிய நூலில் இருக்கிறதென்று தள்ளி விடுவ தும் அதுவே. இதனை உமாபதி சிவம்,

“ தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும் எவையும் தீதாகா ”

என்று கூறி இருக்கின்றதை நாம் உணர வேண்டும். நமது சங்கங்கள் போற்றிவரும் பல கொள்கைகளை மாற்றித் தற்கால விஞ்ஞான முறைகளையும் அவைக ளோடு இணைத்து மக்களுக்குப் பயன்படும்படியான கோட் பாடுகளையும் நாம் நிலைநிறுத்த வேண்டும். அப்போதுதான் உண்மையான சேவை செய்தவர்கள் ஆவோம். உண்மை யான சமயிகளாகவும் ஆவோம். அந்த முறையில் நாம் சமயத்தை அறிந்து நமது வாழ்க்கையையும், சமூக வாழ்க் கையையும் முற்படுத்துவோமாக! அப்போதுதான் தற் போது குறுகிய அளவில் உள்ள சைவ சித்தாந்த அறிவை வெளி நாடுகளுக்கும் கொண்டு செலுத்தி உயர்ந்த நிலையை அதற்குத் தரமுடியும். இந்தக் கருத்துக்களை ஓரளவில் உங்கள் சிந்தனைக்கு விடுகிறேன்.

நமது நாடு மிக ஏழை நாடு. சமயப்பணி செய்வதற்குப் பணம் ஏது என்ற கேள்வி எங்கும் கேட்கப்படுகின்றது. கிறிஸ்வதர்கள் எண்ணிக்கை குறைவாக இருந்தபோதி லும் நிரம்ப சமூக வேலைகளும் சமயத் திருப்பணிகளும் செய்து வருகிறார்கள். அவர்களுக்கு வெளிநாடுகளிலிருந்து உதவி வருகின்றதென்று கூறுகிறார்கள். ஆனால், உள் நாட்டிலிருந்து அவர்கள் எத்தனை உதவி பெறுகிறார்கள் என்று நாம் நினைப்பதே இல்லை. இந்துக்களிடமிருந்தும், அரசியலாரிடமிருந்தும் பல வகைகளிலும் அவர்கள் உதவி பெறுகிறார்கள். அதற்கு ஏற்ற வசதிகளைத் தேடிக் கொள்ளுகிறார்கள். நமது சமயப் பெரியார்களோ பல வகையாக வரக்கூடிய உதவிகளைக் கோருவதும் இல்லை. பெறுவதுமில்லை. உதாரணமாகத் தற்போது மத்திய

அரசியலாரிடமிருந்து நல உரிமைச் சங்கங்களுக்கும், ஹரி ஜன சேவைகளுக்கும் கோடிக்கணக்கில் பணம் செல வழிக்கப்படுகின்றது. அந்தப் பணத்தில் பெரும் பகுதி கிறிஸ்துவ சேவையாளர்களுக்குப் போய்ச் சேருகின்றது. நம்முடைய மக்களோ அதைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. மேலும், கிறிஸ்துவப் பள்ளிகளுக்கும், மற்ற நிலை யங்களுக்கும் கணக்கற்ற தொகைகள் கொடுக்கப்படு கின்றன. நம்முடைய சமூகங்கள் மிகப் பெரியவையாக இருந்தபோதிலும் அவர்களைப்போல சமபங்கும் கிடைப்ப தில்லை. இந்தக் குறை நம்முடைய ஊக்கமின்மையால் ஏற்படுகின்றதே தவிர நாட்டில் பொருள் இல்லை என்ற காரணத்தினால் அல்ல. நம்முடைய வெளிற்றுத் தன்மை நம்மிடம் வரக்கூடிய திருமகளையும் உதறித் தள்ளி விடு கின்றது. நமது சமயப் பணியாளர்கள் இந்த வகையில் நன்கு ஆராய்ந்து பெறக்கூடிய உதவிகளைப் பெற முயல் வதே நலமாகும். மத்திய அரசியலார் கல்வி நிலையங்கள், ஏழைகள் — ஹரிஜனங்கள், பிற்பட்ட வகுப்பார் முதலி யோர்களுக்கு ஏற்படுத்தி இருக்கும் உதவிகள், சமூக சேவைகளுக்கு ஒதுக்கி வைத்திருக்கும் உதவிகள், மாண வர்களுக்குத் தகுந்த கட்டிட வசதிகள், உணவு விடுதிகள், உடற் பயிற்சி நிலையங்கள், ஆடல் பாடல் வசதிகள், விளை யாட்டு இடங்கள், திறந்த வெளி நாடக மன்றங்கள், நீந்தும் குளங்கள் இன்னும் பல வசதிகளுக்கும் பெருந் தொகைகளை ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். நாமோ முயற்சி செய்து பெறுவதில்லை.

இனி, மடங்கள் தாம் செய்யக் கடமைப்பட்டிருக்கும் செய்திகளைச் செய்கின்றனவா? சில சொற்பொழிவுகளை நிகழ்த்தி வைத்தாற் போதுமா? அல்லது உணவு இட்டால் போதுமானதா? சில மாணவர்கட்குச் சமயக் கல்வி கற் பித்தால் போதுமானதா? ஒருக்காலும் போதுமானதல்ல. மற்றச் சமயத்தார்கள் ஏழை அனாதைகளுக்குக் கல்வி கற்பித்து அன்னார்களைச் சமய ஊழியர்களாக ஆக்குவதை நேரில் கண்டிருக்கிறோம். நம்முடைய மடாதிபதிகள் என்ன செய்துவருகிறார்கள்? இவர்கள் உண்மையாகப் பாடுபட்டால் பிச்சை எடுக்கும் இழிவுச் செயலையே நாட்டி லிருந்து விலக்கி விடலாம். சமயத் தொண்டர்கள் இல்லை

என்ற பேச்சையே நீக்கிவிடலாம். உண்மையாகப் பாடு படக்கூடிய எண்ணம் இவர்களுக்கு இருக்குமாகில் நாடு எவ்வளவு விரைவாக முன்னேறிவரும்? இவ்வாறு செய்யும்போது நமது நாடு வேறு நாடாகவே ஆகிவிடும். இதிகாசங்களிலும் புராணங்களிலும் கூறுகின்ற நாடு மீண்டும் நம்மிடைத் தோன்றிவிடும். அப்படிப்பட்ட கனவு இனி நனவாக வேண்டுமென்று அம்மையப்பனை வழுத்துவோமாக! வணக்கம்.

---

# திருமுருகாற்றுப்படை சைவ சித்தாந்த விளக்கமே

வித்துவான் - செ. வேங்கடராம செட்டியார்

(மலர் - 30 ; இதழ் - 8 ; 256-ம் பக்கத் தொடர்ச்சி)

## 14. துதிக்குமுறை

யான் கூறிய இவ்விடங்களில் ஆயினும் ஆக, அவை போன்ற வேறு இடங்களிலாயினும் ஆக முன்னே நீ எங்கு அழகு பொருந்த அம் முருகனைக் காண்கின்றாயோ அவ்விடத்து முகம் விரும்பித் துதிசெய்து கைகளைத் தலைமேல் கூப்பி வாழ்த்திய பின்னர், அக்கடவுளின் திருவடிகளில் நின்முடி படுமாறு தண்டனிட்டு, அறுவர் பயந்த ஆறமர்செல்வ! ஆல்கெழு கடவுட் புதல்வ! மலைமகண் மகனே! முதலிய பல பெயர்களைச் சொல்லி யானறிந்து கூறிய அளவிலே நீ துதித்துவிட்டு, "நின்தன்மை யெல்லாம் முழுதும் அளவிட்டறிவது என்போன்ற உயிர்ப்பன்மைகட்கு அரிது. ஆகையால் நின்புகழ் என் சொல்லளவில் அமையாதாகும். நின்னோடு ஒப்பார் இல்லாத மெய்ஞ்ஞானத்தை யுடையோனே! நின்திருவடிப் பேற்றை நினைந்து வந்தேன்" என்று நீகுறித்ததை மொழிவாயாக. அவ்வாறு நீ மொழிவதற்கு முன்னே நீ, விண்ணப்பம் செய்ததை மனதிற்கொண்டு வேறுவேறாய குறிய பூத கணங்களாயிருப்போர், விழாநடக்கும் அவ்விடத்து வீறுடன் தோன்றுவார்கள்.

தோன்றிய அவர்கள், நினக்காக முருகனை வேண்டிக் கொள்வார்கள். "பெருமானே! அறிவு முதிர்ந்தவனும்

வாய்மையுடையவனும் ஆகிய இரவலன் ஒருவன். நின் வளமிக்க புகழினைக் கூறவிரும்பிக் கேட்போர்க்கு இனியன வும் உறுதியளிப்பனவும் ஆக மிகப்பலவற்றைச் சொல்லி வாழ்த்திக்கொண்டு வந்துளான். அவன் அளிக்கத்தக்கான்'' என்பது அவர் வேண்டுகோளாக இருக்கும். பழங்கள் உதிரும் சோலைகளையுடைய மலைக்குரியவனாகிய முருகப் பெருமான் அவ்வேண்டுகோளையுணர்ந்து தன் தெய்வத் தன்மை அமைந்த வலிவிளங்கும் வடிவினையும் வானைத் தீண் டும் உயர்ச்சியும் உடையனாய் அங்கு வந்து தோன்றி, அச் சந் தரவல்ல தன் பெருநிலையை உள்ளடக்கிக்கொண்டு பழ மையான தன்னுடைய மணம் வீசுகின்ற தெய்வத்தன்மை அமைந்த இளமை அழகைக்காட்டி "அஞ்சற்க! நின் வரவை யானறிவேன்'' என அன்புடைய நல்ல மொழி களால் நின்னைத் தன்னொடு கலக்கச்செய்து இருண்ட கட லால் சூழப்பட்ட இம்மண்ணுலகத்தில் ஒப்பின்றி நீ மேம் படும் வண்ணம், பெறுதற்கரிய திருவடிப்பேறாகிய அழி வில்லாத பெரும்பரிசிலைத் தருவான், என்று சீவன் முத்த ராம் பெரும் புலவர் கூறிமுடித்தார்.

முருகப்பெருமானுடைய பெயர்களைக் கூறுமிடத்து அவன் தோற்றமும் ஆற்றலும், அறிவும், தெறலும், அறி வும் விளங்க "அறுவர் பயந்த ஆறமர் செல்வ'' என்பது முதல், 'புலமையோய்' என்பதீறாக இருபத்தேழு பெயர் களால் விளக்கிச் சொல்கின்றார். இப்பெயர்கள், முருகப் பெருமானுடைய புண்ணிய வரலாற்றைச் சுருங்க விளக்கு வதாக உள்ளமை ஓர்க.

குறிஞ்சிநிலக்கடவுள் முருகன் என்பதை விளக்க 'மலைகிழவோனே' எனக் கூறவந்தவர், அம்மலைக்கு அடையாக இழும் என்னும் ஒலியோடு இழியும் அருவியை யும் பழம் உதிர்கின்ற சோலையையும் கூறியுள்ளார். இந்த அடைகளை யூன்றி நோக்கின் இவை வெறும் வருணனைகள் அல்ல; உயர்ந்த உண்மைகளை விளக்கவே இங்ஙனம் கூறி யுள்ளார் என்பது புலப்படும்.

அருவி : மலையில் அகிலும் ஆரமும், மூங்கிலும் தேனிறு லும், ஆசினிப் பலவும், சுரபுன்னையும், கருங்குரங்கும், முசுக்கலையும், பிடியும், களிறும், பொன்னும் மணியும் வாழையும் தாழையும் மிளகுக் கொடியும், மயிலும், கோழி

யும்,பன்றியும்கரடியும், காட்டுப் பசுவும், ஆங்காங்கு நிறைந்துள்ளன. அம்மலை யுச்சியில் கட்டிய கொடிகள்போல் அசைந்து விழும் அருவி, அகிற்கட்டையைச் சுமந்து கொள்கின்றது. சந்தனமரத்தை யுருட்டுகின்றது ; மூங்கிலின் வேரையும் பெயர்க்கின்றது; இவ்வருவியின் தாக்குதலால் தேனெழுகத் தேனிறால் சிதைகின்றது ; ஆசினிப் பலாவின் சுளைகள் அவ்வருவியில் கலக்கின்றன ; இவற்றால் அவ்வருவியின் சுவை விஞ்சுகின்றது. மேலும் அருவியின் அழகு விஞ்சுமாறு சுரபுன்னையின் மலர்கள் அதில் உதிர்கின்றன. இவ்வழகிய அருவியின் சுவையறிந்து உண்ண விழைந்த கருங்குரங்குகள் அண்மையில் வந்தும் அருவியின் வேகத்தைக் கண்டு நெருங்காமல் நடுங்குகின்றன. பெண் யானைகளுக்குக் குளிர் மிகுகின்றது. களிற்றின் கொம்புகளைத் தழுவிக்கொண்டு நடுங்குகின்றன. அருவி, மலையில் புதைந்துகிடக்கும் மணிகளை வெளியில் தோன்றுமாறு கிளறிப் பொன்னைக் கொழித்துக்கொண்டு செல்கின்றது. மெல்லிதாகிய வாழை, அருவியின் ஆற்றலுக்கு ஆற்றாது ஒடிந்துவிழுகின்றது. தெங்கினைத்தாக்கி இளநீர்களை யுதிர்க்கின்றது. மிளகுக் கொடியின் கரிய கொத்துக்கள் காய்ந்து விழுகின்றன. அம்மிளகுக் கொடியின்மேல் மடநடம் பயிற்றிக்கொண்டிருந்த மயில்கள் பலவும் அவ்வருவியைக் கண்டு வெருவியோடுகின்றன. அவற்றைக்கண்டு கோழிப் பெடையும் ஓடுகின்றது. பன்றிகளும் கரடிகளும் மலைக் குகையில் ஒளிந்துகொள்கின்றன. ஆமாவின் நல்ல ஏறுகள் அருவியைக்கண்டு அஞ்சி அலறுகின்றன.

இங்ஙனம் நிகழுமாறு மலையுச்சியிலிருந்து இழும் என்ற ஒலியோடு அருவி வீழ்கின்றது. அகிலும் சந்தனமும் தேனும் பலாவும் வாழையும் இளநீரும் மலரும் பொன்னும் மணியுங் கொண்டு இவ்வருவி செல்வதைக் கண்டால் மலை கிழவோனாகிய முருகனுக்கு மஞ்சனமாட்டத்தான் செல்கின்றதோ என்ற எண்ணமே உண்டாகும். இவ்வருவி, முருகப் பெருமானுடைய அருள் வெள்ளத்தைக் குறிப்பிடுகின்றது. அருவி, மலையிலுள்ள இயங்கு திணையும் நிலைத்திணையுமாய உயிர்களிடைக் கலந்து சிலவற்றை எளிதில் தன்னோடு சேர்த்துப் பெருமைபடுத்தியும், சிலவற்றைத் தாக்கித் தன்னொடு சேர்த்துக்கொண்டும், சில, தன்

னைக் கண்டவுடன் அஞ்சியோடுமாறும் ஒளியுமாறும செய்து இழிவுபடுத்தியும் வீழ்கின்றது என்பதைக் கண்டோம்.

" முருகப் பெருமானுடைய அருளும், உலகில் பக்குவ முதிர்ந்த உயிர்களை எளிதில் தன்பால் சேர்த்து இன்புறுத்தியும் சிறிதே பக்குவம் வந்த உயிர்களைத் துன்பந்தந்து பக்குவம் முதிரச்செய்து தன்னொடு சேர்த்து இன்புறுத்தியும், பக்குவமேயடையாத உயிர்கள் அஞ்சியகலுமாறு துன்புறுத்தியும் நிகழும் இயல்பினது " என்னும் உண்மைப் பொருளை அவ்வருவியின்மூலம் புலப்படுத்தினர் புலவர்.

## 15. சோலை

அவ்வாறு வீழும் அருவியின் ஆற்றலுக்குக் கெடாது தாங்குகின்ற சோலையில் பழங்கள் உதிர்கின்றன என்றும், அந்தப் பழமுதிர் சோலையையுடைய " மலைகிழவோன் " என்றும் கூறியது, முருகப் பெருமானுடைய அருள்வெள்ளத்தைத் தாங்கி நிற்கும் ஆற்றல்வாய்ந்த உயிர்கள் மெய்ஞ்ஞானம் முதிரப்பெற்று உலகப்பற்றில் நின்றும் விடுதலையடைந்து முருகன் சேவடியாகிய பேரின்பத்தில் திளைக்கும் என்பதை யுணர்த்துகின்றது. மரம் உலகமாகவும், பழங்கள் உயிர்களாகவும், தரை இறைவனாகவும், தரையில் பழங்கள் உதிர்வது, உலகப்பற்றில் நின்றும் விடுதலையடைந்த உயிர்கள், இறைவனடியில் இயைவதாகவும் கொள்க.

மரத்திற்கு ஆதாரமாய் உரந்தருவதும் அதன்மூலம் பழத்திற்கு வளம் தருவதும் முதிர்ந்தபின் இழுப்பு ஆற்றலால் தன்மாட்டு வீழச்செய்வதும் தரையேயாதல்போல உலகிற்கு ஆதாரமாய் நின்று ஊற்றமளித்தும் அதன்மூலம் உயிர்கட்குப் பக்குவத்தைக் கொடுத்தும் அருளாற்றலால் அவ்வுயிர்களைத் தன் அடியில் சேர்த்தும் வருபவன் இறைவனே யாதல் தெளிக. இங்ஙனம் உயர்ந்த கருத்துக்களை நோக்கி யுணரவைப்பது பெரும்புலவர் திறனாகும். இவ் வருணனைகள் இத்தகைய சிறந்த கருத்துக்களை விளக்காவிடின் பெரும்பயன் இல்லாதசொற்களைப் புலவர் கூறியதாக முடியும். புலவரை ஆற்றுப் படுத்தும் சீவன்முத்தராம் பெரும்புலவர், இறைவனுடைய மூவகை நிலைகளையும்

அந்நிலைகளை யுணர்ந்து வழிபடுவோரின் மூவகை நிலையினை யும் உணர்த்திய காரணத்தால் இத்திருமுருகாற்றுப்படை அறுவகையாகப் பகுக்கப்பட்டது என்றலே பொருத்த மாகும்.

## 16. முடிபு

இதுகாறும் கூறியவாற்ருல், இறைவனின் மூவகை யியல்புகள் இவையென்பதும், இறை, உயிர், உலகம்என்ற முப்பொருள்களின் உண்மையும், உலகப்பற்றை நீங்கிய வழியே உயிர் இறையடியில் தங்கி யின்புறற்குரியது என்ப தும், உயிர்க்கு இருட்கேவலம், சகலம், சுத்தம் என்ற மூவகை நிலைகள் உண்டு என்பதும், முருகன் அருள்வெள் ளம் இத்தகையதென்பதும் பழமுதிர்சோலை இறைவ னுடைய அருள் திறத்தைக் காட்டுமாறு இவ்வாறு என்ப தும் விளங்குவதால் திருமுருகாற்றுப்படை சைவசித்தாந்த விளக்கமே என்பது தெளிவாதல் காண்க.

இனி, இவ்வாற்றுப்படை, அறுவகையாகப் பகுக்கப் படுதற்கு வேறு காரணமும் கூறலாம். இறைவனுடைய அறிவு, செயல், இச்சை என்ற மூவகை யாற்றலில் அறி வாற்றல் விஞ்சித்தோன்றும் நிலையைத் திருப்பரங்குன்றத் திலும், செயலாற்றல் விஞ்சித் தோன்றும் நிலையைத் திருப் பரங்குன்றத்திலும், செயலாற்றல் விஞ்சித்தோன்றும் நிலை யைத் திருச்சீரலைவாயிலும், இச்சையாற்றல் விஞ்சித் தோன்றும் நிலையைத் திருவாவிநன்குடியிலும் வைத்து விளக்கினர் எனவும், திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர்சோலை ஆகிய மூன்று பகுதிகளில் அம்முருகனை அறிவால் வழிபடுவோர், செயலால் வழிபடுவோர், இச் சையால் வழிபடுவோர் ஆகிய மூவகையடியார் நிலைகளை விளக்கினரெனவும் கொள்ளலாம்.

1. ஞான நிலை : திருப்பரங்குன்றத்தில் முருகனுடைய உருவமுதலியன சொல்லப்படாமல் மலமாசு நீங்கப் பெற்ற தூய ஆன்மாக்கள் சூழ இருக்கின்ருன் என்னும் கருத்தை யுணர்த்தும் “ வண்டின் அரிக்கணமொலிக்கும் குன்றமர்ந் துறைதலும் உரியன் ” என்றே சொல்லி யிருத்தலின், அங்கு ஞானசக்தி மேற்பட முருகப்பெருமான் ஞான நிலை யில் விளங்குகின்ருன் என்பதையே விளக்கினர் என்று

கொள்ளலாம். ஞானமே வடிவாய ஆன்மாக்களால் சூழப் பெறுதல் ஞானநிலைக்கே பொருத்தமாதல் காண்க.

**2. கிரியை நிலை:** திருச்சீரலை வாயில், முருகப்பெருமானுடைய ஆறுதிருமுகங்கள் செய்யும் தொழிலையும் பன்னிருகரங்கள் செய்யும் தொழிலையுமே விரிவாகக் கூறியிருத்தலாலும், முருகன் யானைமேலூர்ந்து செல்லும் செயலையே சிறப்பாகக் கூறியிருத்தலாலும், முருகனது செயலாற்றல் விஞ்சிய கிரியாசக்தி நிலையே விளக்கப்பட்டது என்பதை யுணரலாம்.

**3. இச்சை நிலை:** திருவாவினன்குடியில், திருமால் முதலிய தேவர்கள் வணங்க "மடந்தையொடு சின்னாள் தங்குவதாகக் கூறப்படுவதால் இச்சைநிலை விளக்கப்பட்டதாகக் கொள்ளலாம். மடந்தையொடு தங்குவதற்குக் காரணம் இச்சையேயாதல் தெளிவு.

**4. ஞான வழிபாடு:** திருவேரகத்தில், அந்தணர் ஆறெழுத்தடங்கிய அருமறையை நாவியல் மருங்கின் நவிலப் பாடி வழிபடுவதாகச் சொல்லப்படுவதால் அவ்வந்தணர் முருகனை ஞானத்தால் வழிபடுகின்றார் என்பது விளங்கும்.

**5. கிரியை வழிபாடு:** குன்றுதோறாடலில், வேலன், முருகன் வேடந்தாங்கி மகளிரொடு கூடிக் குரவையாடி வழிபட்டதாகச் சொல்லப்படுவதால் அவ்வேலன் கிரியையால் வழிபட்டமை தெளிவாம். ஆடல் கிரியையாதல் தெளிவு.

**6. இச்சை வழிபாடு:** பழமுதிர் சோலையில், குறப்பெண், தன்முன்னிலையில் முருகன் வரல் வேண்டுமெனவும், நல்நகர் வாழவேண்டும் எனவும் விரும்பி வழிபட்டாள் என்று கூறியிருத்தலால் அவள் இச்சையால் வழிபட்டாள் என்பது பெறப்படும். "பெண்" என்னுஞ் சொல்லே பெட்பு (இச்சை) உடையவர் என்பதை விளக்குதலும் அறிக.

இனி, இவ்வாறன்றித் திருப்பரங்குன்றத்தில் முருகன் வடிவம் யாதும் கூறப்பெறாமையால், அவன் அருவாய் நிற்கும்நிலையை யுணர்த்தியதாகவும், திருச்சீரலைவாயில் ஆறுமுகமும் பன்னிருகையும் உடையனாக முருகன் கூறப்படுவதால் அம்முருகன் அருவ நிலையை விடுத்து உயிர்களின்

பொருட்டு மேற்கொண்ட உருவ நிலையை யுணர்த்தியதாக வும், திருவாவிநன்குடியில், திருமால், உருத்திரன், இந்திரன், முப்பத்துமுக்கோடி தேவர் முதலியோர் சென்று முருகனைத் தரிசித்ததாகக் கூறியிருத்தலால் உயிர்வருக்கத்தில் உயர்ந்தோராகிய தேவர் வழிபட நிற்கும் நிலையினை யுணர்த்தியதாகவும், திருவேரகத்தில் அந்தணர் மந்திரமோதி மலர்தூவி வழிபட்ட முறையைக் கூறியதால், பூதேவர் என்று புகழப்படும் செந்தண்மைவாய்ந்த அந்தணராகிய மக்களுள் உயர்ந்தோர் வழிபடநிற்கும் நிலையினையுணர்த்திய தாகவும், குன்றுதோறாடலில் குறவனாகிய வேலன் வழிபாடே கூறியிருத்தலால் மக்களில் இழிந்தோரும் வழிபட நிற்கும் நிலையினை யுணர்த்தியதாகவும், பழமுதிர் சோலையில் குறமகள் வழிபாடே சிறப்பாகக் கூறியிருத்தலால் பெண்டிர்க்கு முத்தியில்லை யென்பாரை மறுக்கப் பெண்களும் வழிபடநிற்கும் நிலையை யுணர்த்தியதாகவும் கொள்ளலாம்.

இதனால் முருகன் அருவாயும், உருவாயும் நின்று தேவரும் மக்களில் உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் பெண்டிரும் தத்தம் நிலைமைக்கேற்றமுறையில் வழிபட அருள் செய்கின்றான் என்பதும், பிறப்பானும் பிறசிறப்பானும் வேறுபாடு இருப்பினும் வழிபடுவோர் எல்லோருக்கும் பொதுவாகிய அன்பு ஒன்றே அம்முருகப்பெருமானுக்கு வேண்டுவதென்பதும் விளங்கும்.

இவ்வாறு முருகப்பெருமானுடைய நிலைகளை யறிந்த, வீடு பெறவிரும்பிய புலவர், தம் தகுதிக்கேற்ற இடத்தில் இறைவனை யுணர்ந்து வழிபட்டு வீடுபெறுவார் என்பது சீவன் முத்தராம் பெரும் புலவரின் துணிவு.

இத்தகைய கருத்துக்களை ஆழ்ந்து நோக்கி யுணர்ந்து கொள்ளுமாறு பொக்கமில் புலவர் நக்கீரனார், திருமுருகாற்றுப்படையினை இயற்றியுள்ளார் என்க.

என் சிற்றறிவில் தோன்றிய சில கருத்துகளை இங்கு வெளிப்படுத்தியுள்ளேன். இன்னும் ஆழ்ந்து நோக்கும் அறிஞர்கட்குப் புதிய பல கருத்துக்கள் புலப்படும் என்பது என் திண்ணமான எண்ணம். அறிஞர்கள் என்குறையைப் பொறுப்பார்கள் என்னும் நம்பிக்கையுடையேன்.

வாழ்க முருகு நெறி.

# "ஐந்தொழில் குறிக்கும் அபய திருக்கரம்"*

முருகன் திருவுருவம் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு திகழ்வது. அத்தத்துவ உருவகம் கந்தபுராணம். இந்நூலில் எல்லா உறுப்புகட்கும் உயர்சிறப்புகள் மிளிர் கின்றன. அவற்றை அறையத் தலைப்பட்டுத் தலைமையாகிய சிரம் செப்பி, வலது கரங்கள் பற்றிக் கூறிவந்தோம். நென்னல், அபய திருக்கரத்தின் ஐந்தொழில் குறிப்பைப் பகரப்புகுந்து படைத்தல் காத்தல் முடித்தோம். ஏனைய முத் தொழிலை அக்கரம் குறித்தல்பற்றி இன்று இயம்புவோம்.

"...........பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிருமுருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம்உய்ய"

என்றும்,

"முகங்களும் மூந்நான் காகும் விழிகளின் அருளும் வேலும்
வேறுள படையின் சீரும் அழகிய கரமீ ராறும்
அணிமணித் தண்டை யார்க்குஞ் செழுமலர்-அடியும்"

என்றும் கந்தம் பலமுறை கூறுதலின் கரம் பன்னிரண் டென்பதை உணர்க. அப்பன்னிரு கரங்களில் வலது இடது கரங்கள் பற்றி,

"வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம் மாறிலாத
வேல் அபயமே வலம் ; இடம் வாதம் ஏறுபங்கயம்
அணி மழுத் தண்டுவில் இசைந்த ஆறிரண்டு கை"

என்றனர். ஆதலின், அபய திருக்கரம் வலக்கையாகும்.

ஐந்தொழிலை சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம் அனுக்கிரஹம் என்பர் வடநூலார். இதனை முறையே

---

*இது ஞானியார் சுவாமிகள் தமது திருமடத்தில் 1931-ம் வருடம் நிகழ்த்திய சொற்பொழிவு. திரு. தி. கி. நாராயணசாமி எழுதிய கைக்குறிப்பு.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பர் நந்தமிழர். இவ்வைந்தும் அருளின் பாற்படுவன. இதனைச் சிவஞான சித்தியார் சுபக்கம் சுட்டுதல் காண்க.

"அழிப்பு இளைப்பாற்றல்; ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம்
கழித்திடல்; நுகரச் செய்தல் காப்பது; கன்ம ஒப்பில்
தெழித்திடல் மலங்களெல்லாம் மறைப்பு; அருள் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு; பார்த்திடின் அருளே எல்லாம்."

(உரை) ஒடுக்கந் தோற்றம் நிலை மறைப்பு அருளென்னும் ஐந்தும் முறையே, இளைப்பாற்றலும், கன்மம் கழியுமுகத்தான் மலபாகம் வரச் செய்தலும், கன்மம் கழியுமாறு அதனை நுகர்வித்தலும், கன்ம வொப்பு வருவித்து மலங்களை முதிர்வித்தலும், பந்தம் விடுவித்தலுமாகிய உறுதிப்பயத்தனவாகலான் ஐந்தொழிலும் அருட்செயலே யாகலின், இவற்றுள் சில மறத்தொழிலே போலுமெனப் பழித்தலை யொழிவாயாக. மற்றும் இதனைச் சிவப்பிரகாசம்:

"ஏற்றவிவை யானருளின் திருவிளை யாட்டாக
இயம்புவர்க ளணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே
யூற்றமிக வருள்புரித லேது வாக
வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தல் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகந்
துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரு மருளருளே யன்றி மற்றுப்
புகன்றவையு மருளொழியப் புகலொ ணாதே"

என்று கூறுதல் காண்க.

மேற்கூறியவற்றான் சம்ஹாரம் (சம்-ஹிரு-அரம்) செவ்வையாய் ஒடுக்கிக் கொள்ளுதல்—அழித்தல்—இளைப்பாற்றல் எனப் பொருள்படுவது அறிந்தோம். அஃதும் பிறவும் அருளே என்றும் தெளிந்தோம். அழித்தல் அருள் என்பதால், மக்கள் முருகனை அழித்தல் தெய்வம் எனக் கூறும் கூற்று அறியாமை யன்றோ? இனி எதனை அழிப்பது? எதனின்று நீங்கி இளைப்பாறுவது? என்ற இன்ன பிற கடாவிற்கு விடை ஆராய்வாம்.

"இன்பமும் பொருளும் அறனும்" என்று மக்களின் உள்ள விருப்பங்களை இயற்கைப்படி முறையில் வைத்தனர்

தொல்காப்பியனுர். ஆதலின் மக்கள் "அவாவுவதில் தலையாயது இன்பம். இக்காரணம் பற்றியே அஃது முதலில் வைக்கப்பெற்றது. பிற இதன் சார்பில் எழுந்தவை. இது நிற்க, இன்பம் மக்களது வேட்கையெனின் அதன் எதிர் மறையாக துன்பம் ஒழிதல் வேண்டுமன்றே ? துன்பத்தை அழித்து, இளைப்பாற்றிவைக்க வல்லவன் எவன் ? இறைவன் ஒருவனே துன்பத்தை அழிக்க வழி வகுக்க வல்லவன். அவன் வகுத்த வழி யென்னை ? அஃதே அழித்தலென்னும் அருள்வழி. துன்பம் துன்பம் என்றேமே அஃது எத்துன்பம் ? நாம் கருதும் எல்லாம் துன்பமேயோ ? மற்று அழித்தற்குரிய துன்பம் எவை ? இதனை வைராக்கிய தீபத்தில் சாந்தலிங்கர் சாற்றுதல் காண்க.

"உடலிதற் பவத்தோ ரைம்பெருந் துயர்மாய்த்
துறுகணத் துயரினென் மடங்கா
விடையுள திதிக்கட் டுயர மூப்பறிவோங்
கிளமையிற் பிணியுரு விடத்தும்
விடலரும் பசிநோய் காமநோய் தணிப்பான்
மிகுபொரு டேடுத றுயரீண்
டடையிறு வதனைக் காக்குத றுயர்வேற்
தாயினு மிகுநாற் றுயரே "

மேற்கூறிய துன்பங்களை மூன்றுகத் தொகுக்கலாம். அவை பிறப்பிலே - இருப்பிலே - இறப்பிலேயாம். பிறப்பின் "ஐம்பெரும் துன்பங்களை" சிதம்பர சுவாமிகள் உரையில் காண்க. இருப்பிலேயுள்ள துன்பங்கள் பாலகுமார விருத்த பருவத்தில் வருவன. ஈண்டு, திருவிளையாடலில் விருத்த குமார பாலரான படலம் நினைவிற்கு வருகிறது. திருவிளையாடலில் உள்ள முறை முதுமையினின்று இளமையாதல். இளமையாதல் இற்றைய நாள் கொண்டுள்ள பொருளில் அன்று. உருவத்திலும் இளமை யாதலாகும். அவ்வாறு முறைப்படுத்திக் கூறியது இறைவன் ஆற்றல் உணர்த்துவான் கருதியாகும். மற்றும் விரிக்கிற் பெருகும். ஈண்டு வருந் துன்பங்கள் அறியாமையாலும் பூர்வ கர்மத்தாலும் வரும் பிணித்துன்பம் ; நீங்காப் பசிநோய்த் துன்பம் ; விடலரும் காமநோய்த் துன்பம் ; இவற்றைத் தணிப்பான் கருதிப் பொருளை ஈட்டலிலும் பாதுகாத்தலிலும் வரும் துன்பம் ; நரைதிரை மூப்பால் துன்பம் ; இறப்பின்

துன்பமோ யாவற்றினும் மிகுந்தது. அதன் அளவைக் கூற நம்மனோரால் முடியுமோ? அம்மம்ம! அது அளவைக் கடந்தது. அதுபற்றியே, "யானேதும் பிறப்பஞ் சேன் இறப்பதனுக்கென் கடவேன்" என்று மணிவாசகரும், "சங்கொத்த மேனிச் செல்வா! சாதல் நாள் நாயேன் உன்னை எங்குற்றாய் என்றபோது" என்று நாவரசும், "இறப்பொடு பிறப்பை எண்ணினால் நெஞ்சது பகீரெனும் துயிலுறா திருவிழியும் இரவு பகலாய்" என்று தாயுமானச் செல்வரும் செப்பிப் போந்தனர்.

இங்கு நாம் பெறலரும் பெற்றி ஒன்றுண்டு. அஃது செயற்கரிய செய்யும் பெரியார் துன்பச் சகிப்பை இன்பமாய்க் கொண்டது. அது நம்மனோர்க்கு எளிதில் வருவதன்று. ஞானவாசிட்டம், அருந்தவத்தினர் துன்பத்தைச் செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்போல் சலியாது தாங்கி, வருவதையும் முகமலர்ச்சியுடன் எதிர் நோக்குவர் என்று கூறுகிறது. பெரியார் சரிதங்கள் காணில் துன்பச் சகிப்பின் அளவே அவர்களை மேன்மைப் படுத்தியதை அறிவோம்.

நிற்க முருகன் இளைப்பாற்ற வைத்த அருளுடையோன் எவன்? சூரபதுமன். அவன் ஆற்றல் என்னை? மக்கள் ஆற்றல் பாற்பட்டதோ? அன்று.

"மாயையின் வலியோனாகி
மால்முத லோரை வென்றே
ஆயிரத் தோரெட் டண்டம்
அரசு செய்துக நூற்றெட்டுக்
காயமதழி வின்றாகிக் கடவுளர்க்
கலக்கண் செய்த தீயசூர் முதல்வன்"

இவ்வாயிரத்தெட்டு பிருதிவி அண்டங்களை நூற்றெட்டு சதுர்யுகங்கள் ஆண்டவன் திறன் என்ன? அயனை அவன் தந்தையாம் காசிபனுக்கு வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் என்ற பஞ்ச அங்கமுடைய பஞ்சாங்கம் கூற அமைத்தான்!

"விரிஞ்சன் மால்தேவராலும் வெலற்கரும் விறலோனாகிப்
பெருஞ்சுரர் பதமும்வேத வொழுக்கமும் பிறவும்மாற்றி
அருஞ்சிறை யவர்க்குச் செய்த அவுணர்கோன்."

இவனது இடுக்கண் ஆற்ருது இறைவனிடம் தேவர் முதலோர் முறையிட்ட முறையீடு பல கந்தத்தில் செறிந்து கிடக்கின்றன.

கோவுநீ ! எங்கள் குரவனுநீ ! தேசிகனீ !
தேவுநீ ! மேலாந்திருவுநீ ! செய்தவநீ !
யாவுநீ ! மற்றை யறிவுநீ ! இன்பதுன்பம்
யாவுநீ யாகில் எமக்கோர் குறையுண்டோ ?

பார்த்துப் பணித்த பணிசெய்து நின்றன்னை
யேத்தித் திரிதல் எமக்குக் கடனாகும் ;
நீத்துத் துயரநெறி நிறுத்தி யெம்மை யென்றுங்
காத்துப் புரத்தல் உனக்குக் கடன் ஐயா !

கந்தநம ! ஐந்துமுகர் தந்தமுரு கேசநம ! கங்கை யுமைதன்
மைந்தநம ! பன்னிரு புயத்தநம ! நீபமலர் மாலை புனையுந்
தந்தைநம ! ஆறுமுக ஆதிநம ! சோதிநம ! தற்பர மதாம்
எந்தைநம ! என்றும் இளையோய்நம ! குமாரநம ! வென்று தொழுதார்.

" நண்ணினர்க் கினியா யோலம் ! ஞானநா யகனே யோலம் !
பண்ணவர்க் கிறையே யோலம் ! பரஞ்சுடர் முதலே யோலம் !
எண்ணுதற் கரியா யோலம் ! யாவையும் படைத்தா யோலம் !
கண்ணுதற் பெருமா னல்குங் கடவுளே யோல மோலம் !

தேவர்கள் தேவா வோலம் ! சிறந்தசிற் பரனே யோலம் !
மேவலர்க் கிடியே யோலம் ! வேற்படை விமலா வோலம் !
பாவலர்க் கெளியா யோலம் ! பன்னிரு புயத்தா யோலம் !
மூவரு மாகி நின்ற மூர்த்தியே யோல மோலம் !"

இங்கு முறையிட்டால் வேண்டிய வேண்டியாங்கு அளப்பரும் ஆற்றலுடையானையும் ஒடுக்கி அருள்புரிவான் என்பது சிந்திக்கற் பாற்று.

ஒவ்வொரு திங்களும் ஒரு நக்ஷத்திரத்தின் பெயர் வாய்ந்தது. சித்திரை - சித்திரை; விசாகம் - வைகாசி; மூலம் - ஆனி; உத்திராடம் - ஆடி; அவிட்டம் - ஆவணி; பூரட்டாதி - புரட்டாசி; அச்சுவினி - ஐப்பசி; கார்த்திகை - கார்த்திகை; மிருகசிரிடம் - மார்கழி; புனர்பூசம் - தை; மகம் - மாசி; உத்திரம் - பங்குனி. அம்மீன் அம் மதியில் பௌர்ணமியுடன் சேரும். நக்கீரர் களவியலுரையில் பெரிய திருவிழாக்களாகக் கூறப்படும் மதுரை

ஆவணியவிட்டம், உறையூர் பங்குனி யுத்திரம், களவழியும் குறிக்கும் கார்த்திகை விழா, மற்றும் மார்கழித் திருவாதிரை ; தைப்பூசம் மாசிமகம் இன்னபிற விழாவரும் நாளில் மதியின் வடிவு ஓர்க. அசுவினி மீன் நிறைமதியுடன் சேர்கின்ற ஐப்பசி மதியில் வளர்பிறையில் திரிதியை, சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி ஆகிய நான்கு நாள் சமராபுரி இறைவன் சமர்புரிந்தான் என்பது சரிதம். சஷ்டி திதியிலே சூரபதுமனை சம்ஹரித்தான்—அழித்தான்—இளைப்பாற்றினன்—ஒடுக்கிக் கொண்டான்—அஃதும் முறையிட்டால் செய்த கருணைத் திறம்.

இவ்வாறு அழித்ததைக் கந்தம் யுத்த காண்டம் - சூரபன்மன் வதைப்படலம் 464-ம் செய்யுள் குறிக்கிறது.

"அங்கவர் மொழியும் வெய்யோ னாற்றலுந் தெரிந்து செவ்வேள்
செங்கைய தொன்றில் வைகுந் திருநெடு வேலை நோக்கி
யிங்கிவ னாகம் போழ்ந்தே எகுதி இமைப்பி னென்னாத்
துங்கம துடைய கீர்த்திச் சூரன்மேற் செல்லத் தொட்டான்."

இப்பாவிலுள்ள சிறப்பு காண்க. அங்கவர்மொழி - தேவர் முதலாகிய சாதுக்கள் முறையீடு (பிரார்த்தனை) வெய்யோன் - சூரியன் (சூரபதுமன்) தபனஹா - தபிக்கச் செய்யும் தன்மை யுடையோன் - என்பில்லா புழு தவழ்தல் போல. 'என்பிலதனை வெயில் போலக் காயுமே' என்ற குறளும் நோக்குக ; தெரிந்து-தெரிதல் - ஆராய்தல். இதற்கு இரண்டு செயப்படுபொருள். மொழியும் ஆற்றலும் தெரிந்து ; செங்கை - காத்தல் கரமாதல் பற்றிச் செங்கை யென்றனர் ; வைகும் - எப்போதும் இருக்கிற ; திரு - வடமொழி சிதைவு அல்ல - மரியாதையில் நின்றது ; நோக்கி - 'நோக்கரிய நோக்கே' என்ற திருவாசக - சிவபுராணம் குறிக்கும் நோக்கென்க ; ஆகம் போழ்ந்து - உடலைப் பிளந்து - இங்கு பிரித்தல் தொழில் ஒன்றே குறிக்கிறது. கொல் என்னும் வினை குறிக்கவில்லை. சூரன் + பதுமன் = சூரபதுமன் ; சூரன் - மயில், பதுமன் - கோழி. இவ்வினை கருணை உணர்த்திற்று. தொட்டான் - தொடுத்தான். பின்னும் இதனை :

"விடம் பிடித்தமலன் செங்கண் வெங்கன லுறுத்திப் பாணி
யிடம்பிடித் திட்ட தீயிற் றோய்த்து முன்னியற்றி யன்ன

உடம்பிடித் தெய்வமிவ்வா றுருகெழு செலவினேகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுதல் தடிந்த தன்றே"

மற்றும் அவன் அருள் பெற்றதை :

" தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமு னுற்றால்
தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமரிந்நாட் செய்த
மாயையின் மகனு மன்றோ வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்"

என்று கூறுதல் காண்க.

---

ஞானியார் நினைவு மலர் : கட்டுரை 4

# திருவெண்ணெய் நல்லூரில் சுவாமிகள் பேருரை

[தொகுத்தவர் : உதவிக் காரியதரிசி-திரு. கந்தநரசிம்மன்]

மெய்யன்பர்களே !

இத் திருத்தொண்டில் அடியேனை அகப்படுத்திய இறைவன் திருவருளை மறவாதிருக்கும் கடமை உண்டு. அத் திருவருளும் தங்களன்பும் துணையிருக்க, அடியேன் இக் கடமையைக் கூடியவரை செய்வேன் என்று துணிகிறேன்.

**நாட்டின் பெருமை :** நாம் கூடியிருக்கும் இந்த நாடு நடுநாடெனப்படும். சேர சோழ பாண்டியராகிய மூவருக்கும் உரியதாக நடுநிலைமையிலிருந்தமையால் இதை நடு நாடென்று நூல் வழங்கும். நம் பெரியோரையும், நம்மையும் நம் சந்ததிகளையும் உய்விக்கத் தோன்றிய திருநாவுக்கரசு சுவாமிகளும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தோன்றிய நாடு ஈதாம். மேலும், மெய்கண்ட தேவர் பெருமான் திருவவதாரம் செய்ததும் இந்த நாட்டிலேதான். அருணந்தி சிவாச்சாரியர் தோன்றியதும், நாயன்மாரில் எழு பேர் அவதரித்ததும் இந்த நாட்டில்தான். இப்படிச் சமயாசாரியரும், சந்தானசாரியரும் தோன்றிய இந்நாட்டில் இப்போது சைவமிருக்கும் நிலையைப் பார்த்தால் வருந்தத் தக்கதே.

**ஊர்ப் பெருமை :** இந்த ஊரை 'நல்லூர்' என்று பெரியோர் வழங்கினர்கள். வெண்ணெய்க் கோட்டை கட்டி உலகன்னையாம் மங்களாம்பிகை தவம் செய்த ஊரானதால் இதற்கு வெண்ணெய் நல்லூர் என்று பெயர். "பித்தா பிறைசூடி" என்ற தேவாரப் பாட்டிலும் இவ் வூரின் பெயர் வருவது காண்க. "நல்லார் தொழும் வெண்ணெய் நல்லூர்" என்றும் வரும். மேலும் இவ் வூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சிவபெருமான் தடுத்தாட் கொண்டதைப் பற்றிக் கூறுகையில், சேக்கிழார் சுவாமிகள் இதை "நல்ல அந்தணர் வாழும் வெண்ணெய் நல்லூர் நண்ணி" என்று சிறப்பித்துக் கூறியிருக்கிறார்.

**ஆலயச் சிறப்பு :** நாமிருக்கும் ஆலயத்தின் பெயர் அருட்டுறை. நம் முதல் ஆசையானது அநுபவிக்கவேண் டிய பொருள் மேலேயே செல்கிறது. இது ஜன்ம ஜன்ம மாக வருவது. இரண்டாவதுள்ளது அதிக ஆசையுள்ளவன் அதிக பணம் தேடுவது. அதன்பின், போக இச்சை உண் டாகிறது. இதனால் அநேக குற்றமிழைக்க நேரிடுகிறது. ஆனல் நமக்கு வேண்டுவன முக்கியமாக மூன்று. அவை தான் அருள் அன்பு அறம் என்பன. மனிதன் இரண்டுகால் பசு போன்றவன். பசுவுக்குப் புல், நீர், நிழல் தேவை யானவை. அம்மூன்றும் கிடைத்ததும் அது ஒருவித விடுதலை அடைவதுபோல, மனிதன் ஆணவம் கன்மம் மாயை என்ற கட்டுக்களினின்று விடுபட்டு வீடுபெற அருள்வேண்டும். விடுபட்டடைவது வீடு. நமக்கு அவ் வீட்டை அடைவிக்கத் துறையா யிருப்பது அருள். ஆகவே, இது அருள்துறை எனப்பட்டது. கடுவன் இளவெயினனார் என்ற தமிழ்ப் புலவர் பரிபாடலுள்,

> "யாமிரப்பவை பொன்னும் பொருளும் போகமும்அல்ல
> நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும்"

என்றார்.

"நின்னையா மிரப்பவை நுகரப்படும் பொருள்களும் அவற்றை உளவாக்கும் பொன்னும் அவ்விரண்டானும் நுகரும் நுகர்ச்சியுமல்ல : எமக்கு வீடு பயக்கும் நின்னரு ளும் அதனை யுண்டாக்க நின்னிடத்து யாம் செய்யுமன்பும் அவ்விரண்டானும் வரும் அறனுமாகிய இம்மூன்றுமே"

என இதற்குப் பரிமேலழகர் மிக அழகாக உரை செய்திருக்கிறார். சைவர்கள் எப்போதும் இறங்கி உழைக்கவேண்டியது அருளே, அருள் துறையே. அதனாலேயே அன்புண்டாகும். அன்பால் அறம் வளர்க்கலாம். அப்படிப்பட்ட அருள் துறையில் நாமிருக்கிறோம்.

நாமிருப்பது குணிப்பொருள். அதாவது நம்மிடம் சிற்சில குணங்களிருக்கின்றன. முக்கியமானவை இன்பம் பற்றவும், அதற்கெனத் தொழிலைப் பற்றவும் செய்யும் குணங்களாம். இவை அறிவை மறைத்து அசாக்கிரதையை வெளிப்படுத்துங் குணங்கள். அதாவது அழிவுடைய தேகத்தில் அழிவில்லாத தேகியை இறுக்கிக் கட்டுவது குணம். பகவத் கீதையிலும் ஸ்ரீ கிருஷ்ணன் ௧௪-ம் அத்தியாயம் ௫-ம் சுலோகத்தில்,

" ஸத்வ ரஜஸ்தம இதிகுணா : ப்ரக்ருதி ஸம்பவா :
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிந மவ்யயம் "

என்று கூறுவது காண்க.

நாம் செய்யவேண்டுவது நம் குணதோஷங்களை அறிய வேண்டுவதே. நம் துன்பங்களை எப்படி நீக்குவதென்று நினைக்கவேண்டும். முற்சொன்ன முக்குணங்கள் நமக்கிருப்பதுபோல இறைவனுக்கில்லாமையால் இறைவன் நிர்க்குண : என்ற பெயருமுடையவன். அவன் ஆத்மாவுக்கு வரும் துன்பத்தைத் தவிர்ப்பவன்.

" சிவ : மஹேஸ்வர : ருத்ர : விஷ்ணு : பிதாமஹ :
ஸம்ஸார வைத்திய : ஸர்வக்ஞ : பரமாத்மா "

என்ற எட்டுப் பெயர்களில் இறைவனை 'ஸம்ஸார வைத்திய' என்றதால் இறைவன் ஜீவர்களின் உயிருக்கு வந்த ஜன்ம ரோகமாகிய மலத்தைத் தொலைக்க வேண்டி வைத்தியன் மருந்து கொடுப்பதுபோல், நம்மைப் பற்றிய மலம் மாயை இவைகளை நீக்கி ஆனந்த நிலையை யடைவிக்கிறான் என்பதறிகிறோம். நேயத்தால் - அன்பால் - பொன்னம்பலவன் நம்மை ஆனந்த வெள்ளத்தில் அழுத்துகிறான்.

சிவ : என்பதிலும் ஒரு முக்கிய அர்த்தமுண்டு. அதாவது ஒவ்வொன்றிலும் தங்கியிருப்பவன் என்று பொருள். அப்பொருளை உணர்த்தவே இறைவன் என்று நந்தமிழர் உரைத்தனர்.

'சிவம்' என்பதற்கு மங்களம் என்றும் பொருளுண்டு. அம்மங்களமாகிய சிவத்தின் சம்பந்தமுடையதே சைவம். அதைப் பற்றியதே சைவ சாத்திரம். ஆனல் இதைச் சைவ சித்தாந்த சாத்திரமென்பர். இது திருக்கைலாயத்தில் நால்வர்க்குரைத்ததாகும். சித்தாந்தம் என்ருல் முடிபு என்று பொருள். சிவபெருமானைப் பற்றிய முடிந்த முடிபுகளாகையின் இது சைவ சித்தாந்த சாத்திரமெனப்படும். சைவத்தைப் பரப்பி எல்லாருக்கும் இன்பம் அளித்தவரே இத் திருவெண்ணெய் நல்லூரில் பிறந்த குருமூர்த்தியாகிய மெய்கண்டதேவ ஸ்வாமிகள். 'திருவளர் நாட்டம் கருணையில்' என்ற பாட்டில் பட்டினத்தார் உரைப்பதுபோல், திருவருள் நாட்டத்தால் யாவும் மெய்யாகி இறைவனே மெய்யாகத் தோன்ற அவ்விறைவனைக் கண்டவராதலின் அவருக்கு மெய்கண்டார் என்னும் பெயர் வந்தது. காலாதீதமாகச் சைவம் நூல்களால், ஆசாரியர்களால், வளர்ந்தது. ஆனல் தற்போது சைவரது நிலை வருந்தத்தக்கதா யிருக்கிறது. ஆண் மக்கள் மட்டுமின்றிப் பெண் மக்களும் நன்குணர்ந்து சைவ நெறியில் நிற்றல் வேண்டும். பெண்மக்களால்தான் சைவம் சிறப்புற்றதென்பதைச் சேக்கிழார் சுவாமிகள்,

> "மங்கையர்க்குத் தனிஅரசி எங்கள்தெய்வம் வளவர்
> திருக்குலக் கொழுந்து"

என்ற பாட்டில் மிக அழகாகப் பாடி ஒரு பெண் சைவத் திருநீற்றைப் பரப்பிய பெருமையைக் கூறியிருக்கிருர். ஆகையால் முக்கியமாகப் பெண்கள் சைவத்தைப் பரப்ப முந்துதல் வேண்டும். இந்த ஊருக்குச் சமீபத்தில் நரசிங்கபுரத்தில் இருந்தாண்ட அரசர்கள் நம் சைவத்தை வளர்த்தார்கள். அரசிகளும் மடங்களும், ஆசாரியர்களும் சைவத்தை வளர்த்தார்கள். ஆனல் நம் தற்போதைய அரசாங்கம் சைவத்தைப் பரப்பாவிடினும் நாம் பரப்பத் தடை செய்யாது சுதந்திரம் கொடுத்திருக்கிறது. தமிழ்நாட்டில் பலர் - சைவர்கள் - பிற சமயத்தில் சேரும் நிலையிலிருக்கின்றனர். ஆனல் சைவ சித்தாந்தத்தைப் பற்றி, திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த (Pope) போப் என்பாரும் (Godwin) குட்வின் என்பாரும் போற்றிப் போற்றி எழுதியிருப்பது நோக்கத்தக்கது.

சமீபத்தில் கனம் வைசிராய் தமிழ்நாட்டுக்குப் போந்த போது நம் சைவ சித்தாந்தத்தின் சார்பாக எவரேனும் ஏதேனும் பத்திரிகை வாசித்துக் கொடுத்தார்களா ? இல்லை. ஆனால் சென்னையில் மகம்மதியர் அவருக்குப் பத்திரிகை வாசித்துக் கொடுத்தார்கள். அப் பத்திரிகைக்குக் கனம் வைசிராய் இறுத்த மறுமொழி நோக்கற்குரியதாகும்.

நாம் செய்யவேண்டுவது நம் சைவ சித்தாந்தத்தைப் பரப்புதலே. இவ்வேலையைச் சைவ மடங்களின்மேல் ஏற்றி விடுவது வழக்கமா யிருக்கிறது. ஆனால் அது இயற்கையே. அதற்காகச் சைவ மடங்கள் தற்கால நிலையுணர்ந்து உதவி செய்ய முன்வருவது சிறப்பாகும். இதற்கோ ரறிகுறி, திருவாவடுதுறை மகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ வைத்தியலிங்க சுவாமிகள் நம் சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்கு ரூ. 100 நன்கொடை யளித்திருப்பதாகும்.

கிருஸ்தவ மதத்தவர் “ All India Reverends Conference ” என்று பெரிய, ஒரு மகாநாடு கூட்டுவதுபோல நாமெல்லோரும் சேர்ந்துழைத்தால் தமிழ் நாடெல்லாம் சைவம் தழைத்தோங்கும்.

---

# மௌனம்

## [பேசாத ஆனந்த நிட்டை]

மா. ப. தியாகராஜன், பி. ஏ.

மோன மென்பது ஞானவரம்பு எனக் கூறக் கேள்விப் பட்டுள்ளோம். ஞானம் என்பது அறிவின் தெளிவே யாகும். அறிவின் தெளிவு அனுபவத்தால் வந்தாலல்லது பயனுடையதாகாது. பொடிபோடுதல் புகைபிடித்தல் முதலிய பழக்கங்கள் உடல் நலத்தைக் கெடுப்பன என எவ்வளவுதான் படித்தாலும் கேட்டாலும் பழக்கம் விடு படுவதில்லை. அனுபவத்தால் கெடுதலை உணர்ந்து தூய உணர்ச்சி பெறவேண்டும். அறிவால் நல்லன உணர்ந்து அதன்வழி பழகினாலல்லது, கல்வியால் பயனில்லை. எனவே, மௌன நிலையின் அனுபவங்களைக் கேட்டால் படித்தால் மட்டும் என்ன பயன் ? அதை உணரவேண்டுமானால்

அதற்குமுன் உழைப்புவேண்டும். சாதனம் வேண்டும். ஊதியம் பெற உழைப்பு அவசியமாகும்.

ஆனால் மௌனமே சாதனமென்றும் உழைப்பென்றும் கருதுவது தவறாகும். அதனால் தான் கோயிலுக்குப் போவ தெதற்கு ? விழாவில் பணம் அதிகம் செலவு செய்வதேன்? மனமது செம்மையானால் போதாதா ? என்ற வினாக்கள் எழுகிறது. மௌனநிலை எய்துதல் ஓர் பயனாகும். அது சாதனத்திற்கோர் சாதகமாகும். அந்தநிலையை எய்துவது, தாமே சித்திக்க வேண்டியதோர் வாய்ப்பாகும். அது வர வில்லையே என்று தன்னை நொந்து கொள்வதோ ? இறை வனைப் பழித்துப் பாடுவதோ ? அடியவர்கள் பாடல்களில் காணலாம். "பாழான என் மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவதுனக் கருமையோ." "எத்தனைவிதங்கள் தான் கற்கினும் கேட்கினுமென் னிதயமு மொடுங்கவில்லை." "கருவி கரணங்களோயக் கண்மூடி யொருகண மிருக்க வென்றால் பாழ்த்த கர்மங்கள் போராடுதே" என்றெல்லாம் தாயுமானவர் பாடுகிறார். மௌனநிலையின் இன்பத்தை ஒரு வாறுணர்ந்து மற்ற இன்பங்களைத் துச்சமென மதித்த நிலையில் அவ்வின்பத்தையே விழைந்து பாடினார்கள்.

முதலாவதாக அவ்வின்பத்தைப் பெற ஓர் ஆர்வம் உண்டாகவேண்டும். அவ்வார்வம் உண்டாகவேண்டு மெனின் ஏனைய விஷயாதி, புகழ், போகங்களில் அலுப்புண் டாய், அவைகளில் வெறுப்பெழ அமைதியை நாடவேண் டும். "நிழலினருமை வெயிலிலிருந்தால் தெரியும்" என்பது போல, உழைப்பின் வேகத்தால் அமைதியின் பெருமையை உணரவேண்டும். அப்பொழுதே அதில் ஆர்வம் உண்டாகும். அதன் அடைவு தற்போதத்தால் வருவ தன்று. இறைவனருளால் ஏற்படவேண்டிய தொரு இன்பமாகும். "சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால் அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்று மாணிக்க வாசகர் பாடுதல்போல் அவன் அருளால் அவனை யுணர அமைதி பிறக்குமே யொழியே நாம் அமைதியை வருவித் துக் கொள்ளுதல் முடியாது. அது கருதியே அருணகிரிநா தர் பின்வரும் எளிய உபதேசத்தைச் செய்திருக்கின்றனர்.

"தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோள் இருந்தபடி யிருங்கோள் எழுபாரு முய்யக்

கொடுங் கோபச் சூருடன் குன்றந் துளைக்க வைவேல்
விடுங்கோன் அருள்வந்து தானேஉமக்கு வெளிப்படுமே."

மற்று நாம் செய்யவேண்டிய சரியை, கிரியை யோக முதலியன, அமைதியில் ஓர் ஆர்வம் உண்டாக்குவதற்கோர் சாதனங்களாகும். அந்த ஆர்வம் பிறப்பிக்கவே ஆன்றோர் கள் இந்துமதத்தில் பலவிதமாக வழிகாட்டியுள்ளார்கள். என்வே இந்துமதத்தில் பலதுறைகளைக் காண்கிறோம். சிறு வயதிலேயே பூஜாக்கிரமங்கள் கற்பிக்கப்பட்டு, விநாயகர் பூஜை சிறுவர்கள் செய்துவருதலால் எக்காரியத்தையும் திட்டமாகச் செய்ய ஒருதிறமை அவர்களுக்கமையும். அப்படி ஆசாரநியமங்களில் பழகாதவர்கள் அறிவிற் சிறந்தவர்களாக இருந்த போதிலும் காரியங்களைச் செயல் முறையில் ஒழுங்காக நடத்தத் திறமையற்றவர்களாக இருப் பதைக் காணலாம். இப்படிப்பட்ட பண்பாடுகளமைய நல்ல காரியங்களில் மனதை ஈடுபடுத்த வாழ்க்கையில் விதி வழியேற்பட்ட செயல்முறைகளைச் செம்மையுற நடத்தி வருவோமானால் இறைவனருள் "தாமே உமக்கு வெளிப் படுமே" யென்று அருணகிரிநாதர் உபதேசிப்பது போல் கிட்டும். எவரேனும், மகான்கள் சரித்திரங்களைக் கவனிப் போமானால், தியானம் செய்து கொண்டிருந்தபோது இவையைத் தரிசித்து ஞானமடைந்தார் என்று கேள்விப்பட வில்லை.

மணிவாசகப் பெருமான் மந்திரியாயிருந்த போது எவ்வளவோ பூஜைகள் செய்திருக்கலாம். ஆனால், குதிரை வாங்கச் சென்றபோது, குருமுகமாக இறைவனருள் அவருக்குக் கிட்டியது. சுந்தரர் மணக்கோலத்தில் ஆண்ட வனால் ஆட்கொள்ளப்பட்டார். புத்தர் பிரான் இராஜ போகத்தைவிட்டு, பட்டினி கிடந்து கடுந்தவம் புரிந்து அமைதிகாண முயன்றார். முயன்று முடிவில் உடலை வதைப்பதில் பயனில்லை என்று கண்டு போதி மரத்தடியில் வேறு என்ன முயற்சி செய்வதென விசாரணை செய்ய அவர் ஞானமடைந்தார் என அவர் சரித்திரத்தில் காண்கிறோம். பட்டிணத்தடிகள் "காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே" என்ற ஒரு சொற்றொடர் கேட்டு, அமை திக்கு முரணான வாழ்க்கையை அடியோடு துறந்தார். எனவே ஜீவபோதம் சிவபோதத்தால் என்று விழுங்கப்

படும் என்பது சொல்ல முடியாது. ஆர்வமிருப்பின் அமைதி பிறக்கும். பின்வரும் உதாரணங்கள் மௌன நிலை இனைய தென நன்கு விளக்கும்.

ஒரு உயரத்தைத் தாண்ட வேண்டுமானல் ஒருவன் என் செய்கிருன். நெடுந்தூரத்தினின்றும் ஓடி வருகிருன். வந்து தாண்டுவதற்கென ஊக்கம்பெற உயர நிலைக்கருகில் நின்று எகுறுகிருன். அந்த நிற்கின்ற தருணத்தில் தைரியம் குன்றிடில் மீண்டும் ஓடுகிருன். எனவே அந்த நிற்கும் நிலையே, மௌன நிலையாகும். அந்நிலையில் பயகம்பனுதிகள் ஏற்படில் அது தவறுதல் நிலையாகும். பக்குவமிருப்பின், அந்நிலையிலே ஒருவன் பவக்கடலைத் தாண்டி விடலாம். நிலைக்கு ஓடிவருதல் போன்றதே சரியை, கிரியை, யோகமார்க்கங்களும் ஏனையவுமாகும். அவைகளிலுள்ள ஆர்வமே மௌனநிலைக்கு ஆக்கமளிக்கவல்லதாகும்.

மற்றும், ஒருவரை நாம் சந்திக்கச் செல்வோமானல், அவருடைய விலாசம் தெரிந்து கொள்கிறேம். பிறகு எந்த வேளையில் காணலாமெனத் தெரிந்து கொள்கிறேம். அவ்வளவும் தெரிந்து சென்றுலும், அவர் நாம் போகும் நேரத்தில் ஒய்வாக இருக்கவேண்டும். இருந்தாலும்நம்மைச் சந்திக்க மனம் வைத்து வெளியில் வரும்வரை நாம் காத்திருக்க வேண்டியிருக்கிறதல்லவா ? அதுபோல் இச்சிவன் சிவனைச் சந்திக்க "முன்னவன் நாமம் கேட்டு, பின்னவற்கே பிச்சியாகி" புலர்வதன் முன் காணவேண்டும் என்று அப்பர் பிரான் கூறுவது போன்று பலவாறு முயன்று சந்நிதிக்குச் சென்று கண்மூடி "வருவாரோ ?" என்று ஏங்கும் நிலை மௌன நிலையாகும்.

மனம், கனவான்கள் வீட்டு வாயிலிலிருக்கும் காவற்காரன் போல் உலவிக்கொண்டிருக்கும். காவற்காரன் மூலம் கனவானுக்கு நாம் வந்திருப்பதைத் தெரியப்படுத்துவதுபோல், மனதை நிறுத்தி இறைவன்பால் உள்முக நோக்கிற் செலுத்தவேண்டும். நிறுத்துவதோடு சிலர் நின்று விடுகின்றனர். அது யோகசித்தி யெனப் பெருமிதம் கொள்கின்றனர். சிவன்பால் மனதைச் செலுத்தினலல்லது சிவனுகிய கனவான் வெளிப்படான். வந்தவுடன் வந்து விட்டார் என்ற ஒரு சந்தோஷம் பிறக்கிறதல்லவா ? அது

போன்றதே பேசாத ஆனந்த நிட்டையும் மௌனநிலையு மாகும். எனவே ஆலயந்தொழுதல், வழிபாடு செய்தல், பாராயண முதலிய பூஜைகள் வீட்டில் செய்தல், விரதாதி கள் அனுஷ்டித்தல் இவை யெல்லாம் இன்றியமையாத சாதனங்கள். அவைகளால்தான் அவ்வானந்த நிட்டை யடையத் தீவிர இச்சையுண்டாகும். அச்சுபேச்சை யுண்டா னல்தான் ஆனந்த நிட்டை கைகூடும். வெறும் மனம் அடக்குதல், கனவான் வாயிலில் காவற்காரனை நிறுத்தி அவனுடன் சல்லாபமாகப் பேசிக்கொண்டிருப்பதை யொக்கும். மனதிற்கு அப்பர் சுவாமிகள் என்ன உபதேசம் செய்கிறார் :—

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சேநீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம்மாதி யென்றும்
ஆரூரா வென்றென்றே யலறுநில்லே"

இது சைவசமய உபதேசம். தற்போது மனம் அடக்க மார்க்கங்கள் பேச்சுத்திறமையினல் பலவாறு யோக மென்ற பெயரால் போதிக்கப்படுகிறது. அதில் ஒரு ஆர்வம் மக்கள் கொண்டு இறைவனிடம் கொண்டுள்ள பக்தியைப் பறிகொடுக்கின்றனர். படித்தவர்களும் அநுஷ்டானமுடைய வர்களும் அவ்வாறு நிலைமாறுகின்றனர். "மலையே வந்து விழினும் மனிதர்கள் நிலையினின்றும் தவருதீர்" என்ற அப்பர் சுவாமிகள் உபதேசத்தை, சைவர்களும் ஆசார அனுஷ்டான ஆலய வழிபாடுடையவர்களும் மனதில் உறுதியாகக் கொண்டு ஆனந்த நிட்டை இறைவனருளால் அடைய முற்படவேண்டு மென்பதே எனது வேண்டு கோள்.

இந்த மௌனநிலை கூடுவது வார வழிபாட்டில் ஓரங்க மாகயிருந்து வருகிறது. இதர அங்கங்களை அதற்குத் துணையாக அமைத்துக் கொள்ளவேண்டு மென்பதை இதனின்றும் தெரிந்து கொள்ளலாம்.

——

வெறுப்பெழ, இறைவனை நாடி எங்கும் நிலையில் காண்பது நீறு மெய்பூசினகோலம். அது பழுப்பு (Grey) என்று கொள்ளப்படுகிறது. சாம்பல் நிறம். அதாவது வாடிய நிலை. பின்னர் அக்காட்சியினின்றும் உயிர்ப்பெழ வாட்டத்தை (தமோகுணத்தை) வென்ற ரஜோகுணம் செம்மேனியை உணர்த்துகிறது. "செம்மேனி அம்மான்" என்று சிவபெருமானைப் பாடியிருப்பதைக் காணலாம். விஷயாதிபோகங்களை வென்ற ஒருநிலையில் காணும் உருவம். பிறகு அம்மேனியில் அனுபவம் அழுந்தப்பெறின் "சிந்தை வாய்ப் பாயும் சிவபுரத்தரசே" என்று சொல்லும்படி அவன் அருள் விலாசத்தை உணர்தல் நிலை, அருளை அம்மையாகப் பாவித்து மாதொருபாகனைப் பச்சை நிறத்தோடு காட்சி அளிக்கும் தன்மை. ஆங்கிலத்தில் (Green of hope) என்று கூறுகின்றனர். பின்னர் சிவானுபவ முதிர்ச்சியில் "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி" காண மின்னல் பொலிவுடன் விரிசடை காணும் காட்சியை ஆங்கிலத்தில் (Yellow of Aspiration) என்று கூறப்படுகிறது. விரிசடை ஆட்டத்தில் ஆன்மகோடிகளின் ஆட்டத்தைக் காணும் பரந்த அனுபவமதுவே யாகும். ஆங்கு "கங்கையைத் தாங்கும்" காட்சி நீலநிறமாகக் காணப்படும். அது உலகம் ஒரு நியதி அல்லது ஒழுங்கில் ஆட்டுவிக்கப்படுகிறது. ஒழுங்கற்ற நிலையில் ஆட்டப்படவில்லை யென்பதை உணர்த்த நீலநிறக் காட்சி அளிக்கிறான். அது ஆங்கிலத்தில் Blue of harmony என்று கொள்ளப்படுகிறது. "நிறங்களோ ரைந்துடையாய்" என மணிவாசகப் பெருமான் தாம் கண்ட சிவயோக அனுபவக் காட்சியினைச் சுருக்கமாகப் பாடியருளி யிருக்கின்றனர் என்பது யான் காணும் பொருளெனத் தெரிவித்துக் கொள்கிறேன்.

—மா. ப. தியாகராசன்.

2

"நள்ளிருளில் நட்டம் பயிலுதல்" என்னும் திருவாசகத் தொடர், உயிர்கள் உணர்வும் செயலும் இன்றி அறியாமை வல்லிருளில் அழுந்திக் கிடக்கும் "கேவல நிலை"க் காலத்தும் அவ்வுயிர்களின் பொருட்டு இறைவன் வாளா இருத்தலின்றி ஓவாது நிகழ்த்தும் ஆடலை உணர்த்தும். "பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய்......எம் இறை நல் வீணை வாசிக்குமே" என்றாற் போல, ஊழி முடிவில் இறைவன் இயற்றும் திருக்கூத்தைக்

குறிப்பது எனினுமாம். எனவே, ஈண்டு "இருள்" என்றது உருவகமே யாகும்.

"நிணிந்ததோர் இருளில் தெளிந்த தூ வெளியே" என்றது, "In the midst of death, life persists; in the midst of untruth, truth persists; in the midst of darkness, light persists" என்பது போல, இறைவன் விளங்கும் நிலையை உணர்த்தியதாகக் கொள்ளலாம். இனி "முன் சிவம் மருவு திரோதாயி கருணை ஆகித் திருந்திய சத்திநிபாதம் திகழுமன்றே" (48) "மருளினில் இருளாய் நிற்கும் அருளினில் ஒளியாய் நிற்கும்" (70) எனச் சிவப்பிரகாசம் கூறுதலும் ஈண்டுக் கருதத் தக்கது. அருட்கண் உடையார்க்கு மேலும் பலப்பல அரும் பொருள்கள் தோன்றுதல் கூடும். —முருகவேள்.

## சைவ சமய வளர்ச்சிக்குத் தொண்டு புரிய விரும்புவோர்க்கு அரிய சந்தர்ப்பம்



Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by C. M. Ramachandran Chettiar, B. A., B.L., and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras 4